[9th August 1960

SRI S. NAGARAJA MONIGAR: இந்தத் திட்டம் சென்ற ஆண்டு நடைபெருமல் போனதற்கு அங்குள்ள கல்வி அதிகாரிகள், மற்ற ஜில்லா போர்டு போன்ற ஸ்தாபனங்கள், அதுபற்றி அங்கு ஏற்பட்ட கஷ்டங்களை உத்தியோகப் பற்றற்ற அங்கத்தினர்களுக்கு தெரிவித்து அவர்கள் அவர்களுடைய சகாயங்களைத் தேடாமல்—அல்லது அவர்களுக்கு தெரிவிக்காமல்—இருந்ததும் ஒரு காரணம் என்பதை சர்க்கார் அறியுமா?

THE HON. SRI C. SUBRAMANIAM: தாமதம் இருந்தது என்பது தெரிகிறது. தாமதத்தை நீக்க இப்பொழுது அறிக்கைகள் விடப்பட்டிருக்கின்றன. இப்பொழுது கொஞ்சம் ஜரூராக நடக்கிறது என்று கேள்வி.

SRI A. VEDARATHNAM: ஸ்தல ஸ்தாபனங்கள் ஆசிரியைகளுக்கு வீடு கட்டிக் கொடுக்க முன்வராத இடங்களில், அரசாங்க உதவி பெறும் பள்ளிகளுக்கு அரசாங்கமே இந்த உதவியை அளிக்க முன்வருமா?

THE HON. SRI C. SUBRAMANIAM: ஸ்தல ஸ்தாபனங்கள் ஏன் செய்யக் கூடாது என்று தெரியவில்லை. அவர்கள் கட்டாயம் செய்தாக வேண்டும்.

*Colleges of Physical Education*

SRI A. VEDARATHNAM: கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) இம்மாநிலத்தில் எத்தனை உடற் பயிற்சிக் கல்லூரிகள் இருக்கின்றன?

(ஆ) பெண்கள் உடற்பயிற்சிக்கு என்ன ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது?

(இ) போஸ்ட்-பேசிக் பள்ளிகளுக்கு உடற் பயிற்சி ஆசிரியர் நியமிக்கும் உத்தேசம் உண்டா?

THE HON. SRI C. SUBRAMANIAM: (அ) Three, Sir.

(ஆ) There is provision for imparting instruction in physical education to girls both in high schools and colleges.

(இ) No, Sir.

SRI A. VEDARATHNAM: இந்த உடற் பயிற்சிக் கல்லூரிகளில் என்ன முறை அனுஷ்டிக்கப்படுகிறது? இந்திய முறையில், சூரிய நமஸ்காரம், ஆஸனம் போன்ற பயிற்சிகள் அங்கு அளிக்கப்படுகின்றனவா? அப்படியானால் அந்த ஆசிரியர்கள் அந்த முறையில் பயிற்சி பெற்றவர்களாயிருக்கிறார்களா?

THE HON. SRI C. SUBRAMANIAM: இந்திய முறையிலும் விளையாட்டுகள் சொல்லிக் கொடுக்கப்படுகின்றன. சிலவிடங்களில், யோகாஸனம், சூரிய நமஸ்காரம் ஆகியவைகளும் சொல்லிக் கொடுக்கப் படுகின்றன என்பதுதான் எனக்குத் தெரிந்த வரையில்.

9th August 1960]

SRI A. VEDARATHNAM : பெண்களுக்கு உடற்பயிற்சி அவசியமில்லை என்ற காரணத்தால் அது கைவிடப் பட்டிருக்கிறதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM: பெண்களுக்கும் சொல்லிக் கொடுக்கப்படுகிறது என்றுதான் பதில் சொன்னேன். "போஸ்ட்-பேஸிக் ஸ்கூல்களுக்கு ஆசிரியர் நியமிக்கப் போகிறார்களா ?" என்று கேட்டதற்கு "இல்லை" என்று சொன்னேன்.

SRI A. A. RASHEED : Will the Hon. Minister be pleased to state whether the Government are running any College of Physical Education in our State and if so, how many?

THE HON. SRI C. SUBRAMANIAM : All the three are privately-run colleges.

SRI P. G. MANICKAM: மேற்கண்ட உடற் பயிற்சிக் கல்லூரிகளில் எஸ்.எஸ்.எல்.ஸி. "பாஸ்ட்" அல்லது "பெயில்ட்" மாணவ-மாணவ-மாணவிகள் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். இவர்களுக்குள் "லோயர் கிரேட்", "ஹையர் கிரேட்" என்ற பாகுபாடு இருக்கிறது. ஆனால் ஒரேவித பயிற்சி அளிக்கப்படுகிறது. ஆகவே, "லோயர்", "ஹையர்" என்று இல்லாமல் ஒரே கிரேடாகப் போடுவதில் சில அனுகூலங்கள் கிடைக்கும். தற்போது "லோயர் கிரேட்" பாஸ் செய்த அநேக ஆசிரியர்கள் வேலையில்லாமல் இருப்பதால் இதுபற்றி கவனித்து ஒரே கிரேடாக்க சர்க்கார் முயற்சி எடுக்குமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : தனிக் கேள்வி வேண்டும்.

*Land Mortgage Banks*

MR. SPEAKER : The hon. Member Sri K. R. Viswanathan is not in his seat. The question and the answer will be printed in the official proceedings.

* 43 *Q.*—SRI K. R. VISWANATHAN : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) the basis on which the lands offered as security to the Land Mortgage Banks are valued;

(*b*) whether the present market rates are taken into account while fixing the value of the land; and

(*c*) if not, the reasons therefor?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) & (*b*) Till recently lands offered as security in respect of loans advanced by Land Mortgage Banks are being valued with reference to their value during pre-war years, i.e., 40 per cent was added to the pre-war value and loans were advanced up to 50 per cent of the value so arrived at. Government have since decided that such lands should be valued with reference to the average market value of similar lands sold in the vicinity during a period of five years prior to the date of application and loans should be allowed by Land Mortgage